# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# காணிக்கை

எனக்குள் இதயமாய்

இயங்கிக் கொண்டிருக்கும்

என் வாழ்விணை தெய்வம்

சாந்திக்கு..

# அணிந்துரை

அழகியலோடு அமைந்த கவிதைகள்

தமிழ் இலக்கியங்களின் முகம் போன்றது கவிதை என்றால் அது மிகையாகாது. கலைகளின் அரசி என வர்ணிக்கப்படும் கவிதைகள் உணர்ச்சிகளின் வெளிப்பாடாய், அறிவின் நுட்பமாய் அழகியலோடு பிறக்கிறது. கவிதைகளின் வகை காலத்துக்கேற்ப மாறுதலை பெற்று வந்திருக்கிறது. சமூகத்தில் நிகழ்வுகளை உணர்ச்சியின் எழுச்சியோடு படம்பிடித்துக் காட்டும் ஊடகமாக திகழ்கிறது கவிதை, அந்த வகையில்தான் கவிஞர் தி.வேதரெத்தினம் கவிதைகளும் எனக்குப் பிடித்துப்போனது. கலை,இலக்கிய நிகழ்வு சார்ந்த சந்திப்பின்போதுதான் அவர் முதல்முறையாக அறிமுகமானார். அவர் எழுதிய கவிதை நூலோடு நண்பர்கள் அறிமுகம் செய்து வைத்தது, பேசியது பசுமையானது. சமூகப் பிரச்னைகளை முன்வைத்து எழுதும் கவிஞரின் கவிதைகளில் அழகியல் தனித்த அடையாளமாக இருப்பதை ஏற்கனவே அறிந்துள்ளேன். அந்த வகையில் உங்கள் கையில் இருக்கும் விண்மீன் பூக்கள் கவிதை நூலும் அப்படிதான், கவலையளிக்கும் சமூகப் பிரச்னைகளை துணிவோடு முன்வைத்துள்ளார். ஐக்கூ அல்லது ஹைக்கூ வகையில் வரும் அனைத்து கவிதைகளும் அற்புதம் என்று கூறலாம் . சமகாலத்து இளைஞர்களை தன் வசப்படுத்தும் மது, அது தரும் சமூகக்கேடுகளை சில கவிதைகளில் கவிஞர் பதிவிடுகிறார் .

அதில் ஒரு ஹைக்கூ..

குடிமகன்களின்
இலவச விடுதி
பேருந்து நிழற்குடை.
மதுக்கடை
முற்றுகைப் போராட்டம்
முடிவடைந்தது புட்டிகள்.

மனித மனங்களை இறுக்கிப் பிடித்துக்கொண்டுள்ள சாதி, அது சார்ந்த அரசியலை வெளிப்படுத்தும் கவிதைகளின் பதிவு தைரியமானவை. ஒரு கவிதையில்

பற்றி எரிகிறது
மலர் வனம்
சாதீ .. என்கிறார்.

மற்றொரு ஹைக்கூ,

சாதிவாரி கணக்கெடுப்பு
முனைப்பில் தலைவர்கள்
நெருங்கிறது தேர்தல்.
தொடரும் ஹைக்கூ,
மரம் வெட்டும் சப்தம்
தொடங்கியது
சாதி கலவரம்.

இப்படி சமூகம், அரசியலில் மட்டுமல்லாது காதலையும் கலங்கச் செய்யும் சாதியத்தையும் பதிவிடுகிறார். சாதிக்காற்று தலைப்பில் வரும் கவிதை:

பலூனை ஊதும்போது
சாதிக்காற்று
நுழைந்து விட்டதா
உடைந்து போனதே
நம் காதல்.

யார் மனிதன்? என்ற தலைப்பில் ஒரு கவிதை. மனிதன் என்பவன் யார் என்பதை சமகாலத்துக்கு தேவையான கருத்தாக பதிவிட்டுள்ளார். எதிர்கொள் என்ற தலைப்பில் வரும் கவிதையில்:

உத்தமர் வேடங்கட்டி
ஓட்டை வேட்டையாடி
கோட்டை கொத்தளங்களில் கும்மாளமிட்டு
நாட்டை சூறையாடும் காலிகள்

வீழப்போவது எப்போது?

எனக் கேள்வி எழுப்புகிறார். தொடரும் அந்த கவிதையை படிக்கும்போது எனக்குள் பட்டுக்கோட்டையின் நினைவுகள் வருகிறது. அப்படி ஒரு அழுத்தமான வரிகள்.

இப்படி புதிய தாலாட்டு, எழுக தமிழா, உரிமைப் பதாகை எனப் பல தலைப்புகளில் மனிதனைத் தட்டி எழுப்பும் வரிகளோடு அமைந்துள்ளது கவிதைகள்.

அடிமை சாசனத்தை எரித்த அக்னி
ஆதிக்க முரணை தகர்த்த சம்பட்டியுகப்
பாழிருட்டை உடைத்த ஞானக்கதிர்
பாமரப் பாட்டாளியின் பகலவன்

எனத் தொடரும் கவிதை மாமேதை மார்க்சு என்றத் தலைப்பில் வருகிறது. இந்த கவிதை நூலில் ஆசிரியர் முன்வைக்கும் பிரச்சனைகளுக்கு என்னதான் தீர்வு என்று நினைப்போரின் மனதுக்குள் மாமேதை மார்க்சு தலைப்பிலான கவிதை ஏதோ ஒரு வகையில் ஆறுதல் தருவதாக அமைந்துள்ளது. இப்படியாகப் பல தலைப்பின் கீழ் அமைந்த விண் மீன் பூக்கள், இயற்கையின் மீதும் கவலைக்கொள்கிறது,

சீமை துரைப் போட்ட விதையிலே
சீரழிஞ்சிப் போனதையா வாழ்க்கை
ஊரெங்கும் தழைஞ்சி நிக்குது
ஊருணி நீரை உறிஞ்சி வாழுது..

எனச்சீமை கருவேல மரத்தின் கேடுகளை வழக்குச் சொற்களோடு வகைப்படுத்தி எழுதியுள்ளார் கவிஞர் வேதரெத்தினம், ஒரு கவிதையில்

அழகானது ஹைக்கூ
சொல்லிவிட்டு போனது
உன் ஒற்றைப் புன்னகை

வரிகளை பிரித்துப் போட்டு கவிதை என்போர் மத்தியில், ஒரு கவிஞனுக்கு

இருக்க வேண்டிய பொறுப்புணர்வோடு விண்மீன் பூக்களை அழகியலோடு வடித்துள்ள கவிஞர் தி.வேதரெத்தினம் அவர்களுக்கு அன்பும், பாராட்டும், மேலும் பல நூல்களை எழுத அனைவரும் வாழ்த்துவோம்.

தென்னடார் அம்பிகாபதி
த.க.இ. பெருமன்றம்,
மாவட்ட செயலாளர்.
நாகை மாவட்டம்.
தினமணி செய்தியாளர்,
வேதாரண்யம்.

# என்னுரை

இன்றைய இளைஞர்கள் இளமையின் எழுச்சியால் கொள்கிறார்கள். காதல் அவஸ்தை, அவமானம், தன் வாழ்வை சிதைத்துக் ஒவ்வொரு மனிதனுக்கும் காதல் அனுபவம் இல்லாமல் இல்லை. ஒவ்வொரு மனிதனின் உள்ளத்தையும் ஒளிப்படமாக மனதில் பதிவுசெய்தேன். கற்பனை செய்தேன். துளித்துளியாள் சிந்தனையில் பூத்தமலர்கள்தான் இவை. “விண்மீன் பூக்களாய்” வலம் வருகிறது. நற்றமிழ் மணக்கும் நன் நாகை மண்ணில் பிறந்தநாள், தருமையாதீனம் (மயிலாடுதுறை) தமிழ்க் கல்லூரியில் இளங்கலை இலக்கியம் பயின்றேன். பல்வேறு அரசுப் பணியில் பணியாற்றிய நான், ஆசிரியராகப் பணியாற்றி பணிநிறைவு செய்துள்ளேன். பல்வேறு சிற்றிலக்கிய இதழ்கள் நாளிதழ்களில் கவிதை படைத்துள்ளேன். கவியரங்கம், பட்டிமன்ற நிகழ்வுகள், அரசியல் மேடைகளின் பேச்சாளராய் தடம்பதித்துள்ளேன். நீண்ட நாட்களுக்குமுன் எழுதிய கவிதைகளைப் பார்த்த என் இளைய மகன் கபிலன் நூலாக வர ஊக்கமளித்தான். அதன் அடிப்படையில் U2write பதிப்பகத்தை நாடிய நிலையில் நூலாக வருகிறது. மேற்காணும் அச்சக ஊழியர்கள், பதிப்பக உரிமையாளருக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றி , இந்நூலுக்குப் பல்வேறு அணிந்துரை நல்கிய தோழர்.கே.பி.அம்பிகாபதி தினமணி செய்தியாளர் மற்றும் தமிழ்நாடு கலை இலக்கிய பெருமன்ற நாகை மாவட்ட செயலாளர் அவர்களுக்கும் தோழமையுடன் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

கவிஞர் தி.வேதரெத்தினம்
செல்:9715396065

# 1. ஹைக்கூ

பசி மறந்தேன்
அமுத சுரபியாய்
உன் நினைவுகள்

துடிக்கிறது வலியால்
என் இதயம்
உன் இடையில் குடம்.

என் உயிரின்
மீட்பர்
உன்விழி

பற்றி எரிகிறது
மலர்வனம்
சாதீ ..

தொண்டர்களின்
உடைமை
மானம் மட்டும்

விழித்துக் கொண்டது
என் தூரிகை
அவளின் கொலுசுசப்தம்.

தாழப்பறக்குது
கொக்குகள்
உன் இமையைத்தாழிடு
பணத்திற்கும் பரவிவிட்டது
மனித நிறம்
கறுப்பாய்..

குடிமகன்களின்

இலவச விடுதி
பேருந்து நிழற்குடை..

சிறையில்
மக்கள் தலைவர்
மறியலில் மரங்கள்

சாதிவாரி கணக்கெடுப்பு
முனைப்பில் தலைவர்கள்
நெருங்குகிறது தேர்தல்

மரம் வெட்டும் சப்தம்
தொடங்கியது
சாதி கலவரம்

செத்து மடிகிறது
பிணந் திண்ணிகள்
ரௌத்ரம் பழகும் ஏழைகள்

உன் கண்களைப் பார்த்தபின்
மதுக்கிண்ணத்தை துறந்துவிட்டேன்
வாழிய உன்கண்கள்..

பொன்னான வாக்குகள்
பொற்குவியலாய்
அமைச்சர்களின் வீடுகளில்

இருண்டவானம் அணிந்து கொண்டது
தங்கநெற்றி சுற்றி
முழுநிலா

என் இதயம்
துடிக்கத் தொடங்கிவிட்டது
என் எதிரில் அவள்

மதுக்கடை

முற்றுகைப் போராட்டம்
முடிவடைந்தது
புட்டிகள் காலி

நீ சுவாசிக்கும்வரை
என் இதயம் துடிக்கும்
என் ஆன்மா நீ தானே..

கோடாரியோடு காத்திருக்கிறான்
மயானத்தில் வெட்டியான்
பண்ணையாரின் வருகைக்காக

உடைபடுகிறது
ஆதிக்க முகாம்கள்
மக்கள் கையில் செம்பதாகை

நிரம்பி வழிகிறது
தேனீக்களின் கூட்டம்
பூப்பெய்தியது மலர்

உறக்கத்தை விரும்புகிறேன்
அப்போதுதானே உன்னை
கனவில் சந்திக்க முடியும்.

பண்ணையார் வீட்டு
பற்றாயம் நிரம்பி வழிகிறது
உழைப்பாளரின் வேர்வை

முகில்களின் யுத்தம்
அழுகிறது
குடிசைகள்

அழகானது ஹைக்கூ
சொல்லிவிட்டுப் போகிறது
உன் ஒற்றைப் புன்னகை.

உதிர்ந்து கிடக்கிறது
அழகான மலர்கள்
இரசனையில்லாத காற்று.

தலைவர்களின் பேச்சில்
தேன் வழிகிறது
தேர்தல் பரப்புரை

# 2. திமிர்

நீ
புன்னகைக்கிற
ஒவ்வொருமுறையும்
கஞ்சியில் குளித்த ஆடையாய்... நான் .

# 3. களவு

என்மன
வீட்டிற்குள்
அவளைத் தாழிட்டேன்
களவுபோனது என் தூக்கம் .

# 4. காற்று

என்னத்திமிர்
என்கண்முன்னே
உன் கூந்தலையும்
ஆடையையும்
அலங்கோலமாக்குகிறதே
உருவமிருந்தால்
கட்டிவைத்து உரித்துவிடுவேன்
காற்றை...

# 5. வேறொன்றுமில்லை

நீ
என்னை ஸ்பரிசிக்கிற
பொழுதில்
பூமியைப்
புரட்டிப் போடும்
நெம்புகோலாய்
நான்
உண்மையைத் தவிர
வேறொன்றுமில்லை

## 6. அவள் செயல்

பழுதாகிப்போன
என் இதயம் உயிர்த்தது
புதிதாய் ...
எல்லாம்
அவள் செயல்

# 7. மலடு

பூமி முச்சூடும்
நட்சத்திரப்பூக்கள்
மலராதவரை...
ஏழைகளின் வாழ்வு
மலடுதான்

## 8. காதல்

கடலில் வலைவீசினேன்
வலைத்திமிர மீன்கள்
விற்கமனமில்லை
என் காதலை

# 9. விடியல்

காதல்
புதுயுகத்திற்கான
விதைமட்டுமல்ல
புதிய விடியலுக்கான
கிழக்கு

# 10. அவத்தை

மழை
உன்னை நனைத்தது
அவத்தைப் படுகிறேன்
நான்
நீர்க்கோர்வையால்

# 11. நிலா

முகில் பர்தாவால்
முகத்தை மறைத்தது
நிலா...
புன்னகையேந்தி வரும்
என் காதலி

# 12. இரை

நீ என் இதயக் கருவறையில்
இறையாய்.
நான் அங்கு
சாதிக்கு
இரையாவது நியாயமா?

# 13. பக்தன்

உன்
அழகை ஆராதிக்கும்
பண்டாரமல்ல
உன் அன்பை வணங்கும்
பக்தன் நான்

# 14. தவிப்பு

நீ
நடந்துபோகும் பொழுது
பரிதவிக்கிறது மனம்
உன்னை ஏந்தி நிற்கும் பூமியாய்
பிறந்திருக்கக்கூடாதா?

## 15. களிப்பு

நீ
குடித்துவைத்த
குவளை நீரை
தலையில் ஊற்றிக்கொண்டேன்
குடமுழுக்கு நீராய் குதூகளிக்கிறது
என் மனசு

# 16. அலர்

புதிது புதிதாய்
மீண்டும் பேச சற்றே
இளைப்பாறுகிறோம்
இடைவெளியில்
ஊர்
நம்மைப்பற்றி
பேசத் தொடங்கிவிட்டது

# 17. சாதிக்காற்று

நீ
பலூனை
ஊதும்போது
சாதிக்காற்று
நுழைந்துவிட்டதா!
உடைந்துபோனதே
நம் காதல்

# 18. பார்வை

பொக்கைவாய்
கிழவனுக்கு
மீண்டும் முளைத்தது பல்
எல்லாம் உன்பார்வை
சுடர்தான்

## 19. பரிசு

பயத்தோடு
மேடையேறினேன்
பரிசோடு
கீழிறங்கினேன்
முதல் வரிசையில்
அவள்

# 20. வாசிப்பு

நீ என்னை
காணாநிலையில்
குறுஞ்செய்தியில்
குமுறலை கொட்டுகிறாய்
நான் வாசித்து கொண்டுதானிருக்கிறேன்
உன்னை என் வாழ்க்கைப்
புத்தகமாய்

# 21. காதல் இன்பம்

நீ
எனக்காக எதை இழப்பாய்
வினவுகிறாய்
நான்
சனாதனவன்மத்தை தவிர
வேறொன்றுமில்லை யென்கிறேன்
ஒட்டிக்கொள்கிறாய்
எனக்குள் உயிராய்
வாழ்க காதல்.
நீ
உன் வீட்டு மொட்டை மாடியில்
கூந்தலை சிக்கெடுத்து போகிறாய்
வேடனின் அம்புப்பட்ட புறாவாய்
துடிதுடித்து சாகிறேன்

# 22. தீட்டு

மேடைகளில்
சேரிக் குழந்தைகளை
முத்தமிட்ட தலைவர்
ஏரிப்பிரவேசம் கண்டார்
தீண்டாமை
தீட்டை கழிக்க

## 23. அவள்

இயற்கைத்தாய்
பூமியெங்கும்
இருட்டைக் கவிழ்த்தாள்
என் வீட்டில் மட்டும்
வெளிச்சம்
என் எதிரில்
அவள்

## 24. ஒழுக்கம்

பிறன்மனை நாடல்
பெரும்பிழையென்றவன்
இரவு வந்ததும்
எதிர்வீட்டு கதவைத் தட்டினான்
அழுது புலம்புகிறது
ஒழுக்கம்

# 25. தங்கம்

கண்கள் கூசுகிறது
பொன்னாபரணங்களை
களைந்துவிடு
தங்கத்திற்கு எதற்கு தங்கம்

## 26. விசுவாசம்

முல்லைப்பூவின்
வாசத்தை
நெட்டித் தள்ளுகிறது
என் சுவாசம்
அவள் கூந்தலை முகர்ந்தபின்

# 27. முரண்

மனைவி
மதுகடைக்கு
பூட்டுபோட்டாள்
கணவன்
வீட்டிற்கு
பூட்டு போட்டான்

# 28. ஏக்கம்

எல்லாத் திட்டங்களும்
இனிக்கிறது
ஏட்டில்
ஏழைகளுக்கு
எட்டாக்கனி

# 29. கோமாளிகள்

ஏழைத் தாலிகளை
தாம்பாக்கி
உயர்கிறவனை
உழைப்பால்
உயர்ந்தவன் என்கிறார்கள்
கோமாளிகள்

# 30. முள்வேலி

முள்வேலிக்குள்
ஈழத் தமிழன் மட்டுமல்ல
இந்தியத் தமிழனும்
அச்சுறுத்தும் முள்வேலியாய்
அணைக்கட்டுகள்

# 31. தேர்தல்

ஏக்கத்தில்
வாக்காளர்கள்
எப்போதுவரும்
நம் ஊருக்கு
இடைத்தேர்தல்

## 32. காகம்

எதிர்வீட்டுக்காரர்கள்
அவசர அவசரமாக
காலிசெய்கிறார்கள்
வீட்டை
கரைகிறது காகம்

## 33. மனுநீதிநாள்

குப்பைத் தொட்டியை
முற்றுகையிடும்
ஆவினம் எங்கள்
ஊரில்
மனுநீதிநாள்

# 34. வைகறை

உள்ளூர்ச்செய்தி
உலகச் செய்தி
எதுவாயினும்
விரைவாய்த் தரும்
வைகறைப் பொழுதில்
எங்கள் கிராமத்து
தேநீர்க்கடை

# 35. முறுவல்

உன்
உதடுகளை முறுக்கி
முறுவலித்து போகிறாய்
என்
இதயத்திலிருந்து
துளித்துளியாய்
வழிகிறது குருதி

## 36. ஒளிர்

தொலைந்த
என்
முகவரியைத் தேடுகிறேன்
உன் ஒளிமுகத்தை
என்பக்கம் திருப்புவாயாக

# 37. ஆணவம்

அரிவாளோடு
அலைகிறார்கள்
ஆணவ வெறியர்கள்
அகப்படவில்லை
“அவ்வையும் பாரதியும்”

## 38. வெற்றி காண்போம்

வெற்றி வெற்றி என முழுங்குடா - நம்மை
சுற்றி நிற்கும் சூன்ய சுவர் தகர்ந்ததடா
உழைக்கும் மக்களின் கைதான் உயர்ந்ததடா
ஆண்டாண்டு காலம் நம்மை அடிமைப்படுத்திய
ஆண்டையெல்லாம் மாண்டுபோனானடா
இனியும் மீண்டிடுவோமென
மார் தட்டி நில்லுடா
ஏழைப்பாழைகளென எவனுமில்லை - இனி
கோழையாய் ஒருபோதும் வாழப்போவதில்லை
கொடுமையெல்லாம் ஒழிந்ததடா அதை
-ஒரு போதும் கோலூன்றி நடந்திடவிடோமென முழங்குடா
ஆயுதகளத்தை புறந்தள்ளுவோமடா
அறிவுகளத்தால் வெற்றிகொள்வோமடா – தூய
கொள்கையால் கந்தையாகிவிட்ட
அகிலத்தை சலவை செய்வோமடா – புது
எண்ணங்களால் வாழ்வை அமைப்போமடா –
இது நடக்குமென திடமாயிருந்து
வெற்றிக் கொண்டாட்டம் காண்போமடா .

# 39. யார் மனிதன்?

மனிதன் என்பவன் யார்? பிறர்
மனதில் நிலையாய் நிற்பவனே
பொய்யும் புரட்டையும் புரட்டுகிறவனே - மனிதன்
மெய்யாய் உழைத்து வாழ்பவனே - மனிதன்
மூடப்பழக்கத்தால் முடங்கிய மானுடத்தை
முற்போக்கு பாதையில் பயணிடத்திட
செய்பவனே மனிதன்
சாத்திரம்சனாதனம் பேசி வாழ்பவனல்ல
சாதி தடையுடைத்து சமத்துவம் காண்பவனே
மனிதன் –
இனமானம் பேசி இருக்கைப்பிடிக்க துடிப்பவனல்ல - வர்க்க
இனமாய் ஒன்றுசேர போராடுபவனே - மனிதன்
மனிதன் என்பவன் யார்? - பிறர்
மனதில் நிலையாய் நிற்பவனே!

## 40. முழக்கம்

முழங்கட்டும் போர்ப்பறை
விலகட்டும் மாயத்திரை
வீழட்டும் சாதி
வாழட்டும் நீதி
மடியட்டும் மடமை
விடியட்டும் புது வாழ்வு
எழட்டும் ஏழைவர்க்கம்
விழிக்கட்டும் மானுடம்
ஓங்கட்டும் ஒடுக்கப்பட்டோர் குரல்
ஒலிக்கட்டும் புரட்சி முழக்கம்
நொறுங்கட்டும் தடைகள்
உடையட்டும் பொய்முகங்கள்
சேரட்டும் உழைக்கும் கரங்கள்
சூழட்டும் போர் முகில்கள்
அழியட்டும் ஆதிக்கசக்திகள்
உய்யட்டும் மனுதர்மங்கள்
சாயட்டும் சனாதன சுவர்கள்
மாயட்டும் மானுடவேற்றுமைகள்
செழிக்கட்டும் மனிதநேயம்
சிலிர்த்தெழுக செஞ்சேனைகளே!

# 41. எதிர்கொள்

உத்தமர் வேடங்கட்டி
ஓட்டை வேட்டையாடி
கோட்டை கொத்தளங்களில் கும்மாளமிட்டு
நாட்டை சூறையாடும்
காலிகள் வீழப்போவது எப்போது?
அரிகாரப் பூச்சும்
பரிவார பலமும்
பயங்காட்டும் பயந்துவிடாதே
விடத்தில் விளைந்த
விந்தின் சாரம் – நீ
மரணம் எமக்கில்லை
மார்தட்டிசொல் மாற்றமெனும்
ஏற்றத்தை எட்டும்வரை

# 42. சீமை கருவேலம்

சீமைதுரைப் போட்ட விதையிலே
சீரழிஞ்சிப் போனதய்யா வாழ்க்கை
ஊரெங்கும் தழைஞ்சி நிக்குது
ஊருணி நீரை உறிஞ்சிவாழுது
மாரிவருவாளா வானத்தப் பார்த்து
ஏரு உழுவானோ ஏக்கத்தோடு நிக்குறான்
ஏரிகுளமெலாம் வாய்பிளந்து கிடக்குது
தேருப்போல அசைந்து வருது காவிரி
கால்வாய் நீரைமறித்து நிக்குது
காலூன்றிய கருவேலமரம்
நீதிகேட்டோம் நெஞ்சுகுளிர சேதி வந்துச்சு
- ஆனா
ஏரெடுத்து பார்க்க மறுக்குது அதிகாரம்
இவர்கள் நம்பி பலனில்லை
இனியும்நாம் உறங்குவதுல நியாயமில்லை
ஊர் கூடுவோம் ஒன்றுசேர்வோம்
கோடாரி கொண்டு வெட்டி சாய்ப்போம்
நாடெல்லாம் தண்ணீரை சேமிப்போம்
நாளைய சந்ததியை காப்போம்

# 43. புதிய தாலாட்டு

அழப்பிறந்தவனல்ல - நீ
அழுகிப்போன பிரபஞ்சத்தை
அறுவை சிகிச்சை செய்யவந்த
மருத்துவ அறிஞன் நீ (அழாதே)
பல்லாண்டுகாலமாய்
பல்லக்கு தூக்கியும்
பயனேதுமில்லாமல்
பசித்து கிடப்பவனுக்கு
புதுவழித்தடம் தர வந்தவனே (அழாதே)
எல்லாம் விதியின் வழியென்று
அல்லல்படுவோரை ஆற்றுப்படுத்தவந்தவனே
கோடிகோடியாய் பணத்தை கட்டிகிட்டு
கோயில் கோயிலாய் சுற்றி திரிபவனுக்கு பிறக்காமல்
கோடித்துணிக்கு வழியில்லா - குடிசையைத்
தேடி வந்து பிறந்ததேனடா - புரியுதடா
விடியாத இரவை உடைத்து
விடியவைக்க வந்த உறைவாளே (அழாதே)

# 44. எழுக தமிழா !

ஏனடா தமிழா
’ஏ’மாந்த தமிழா
விற்கொடியும்
கயற்கொடியும்
புலிக்கொடியுமாய் - மூவேந்த
கொடிபிறந்த மண்ணில்
முன்னேற்றங்கண்ட தமிழா
முந்நூறு கொடி பறக்கும் - இன்று வாழ்க்கை
பின்னோக்கி போனது ஏனடா பாய்வதற்கா
அல்ல மாய்வதற்கா?
கொடிகளில் பிழையா
கொடியேந்தியதில் பிழையா
ஏதுமறியாமலேவீனில்
சாதுவாய் வாழ்ந்து
செத்துமடிவதேனடா?
வார்த்தையை மேடையில்
வெடியாய் வெடிக்கும் – தலைவர்களே
வறுமையின் வாடையில்
உருக்குலைந்து போகும் - எங்கள் வாழ்வை
உயிர்ப்பிக்க மறுப்பதேனய்யா
உன் மத்த சிந்தனையா?
உதிரத்திமிரா- எதுவானாலும்
கவலை கொள்ளாதே - தமிழா
ஏழையின் ஏற்றத்திற்கு எள்ளளவும்
ஏற்றம் காண மறுக்கும்
கொடிகளை இறக்குவோம்
கொடியின் பசிக்கு இரையாக்குவோம்

# 45. உரிமைப் பதாகை

உயர்த்திப் பிடிங்கதோழர்களே
உரிமை பதாகையை உயர்த்திப்பிடிங்க
உதிரயிழப்பில் விளைந்த உரிமையை - ஒருபோதும்
இழந்திடோமென உறுதி கொள்வோம் – தோழர்களே
உழைப்பாளியும் பாட்டாளியும் இல்லையெனில்
உலகில்லையென உரக்க முழங்குங்கள்
சுரண்டலை அறுக்க அரிவாளேந்துவோம்
சுதந்திரமே சுகவாழ்வின் சூத்திரமென்போம்
சாத்திரம்பேசி சரித்திரத்தை மாற்றி நினைப்பவனையும்
சாதிப்பேசி ஊரை கொள்ளிக்காடாக்க துடிப்பவனையும்
சமர் செய்து வெல்வோம்
சமத்துவ யுகம் செய்வோம்
உயர்த்திப்பிடிங்க தோழர்களே
உரிமை பதாகையை உயர்த்திப்பிடிங்க

# 46. மாமேதை மார்க்சு

யார் அறிவார் இவனை
யாவரும் அறிவரோ இவனை
அடிமை சாசனத்தை எரித்த அக்னி
ஆதிக்க முரணை தகர்த்த சம்மட்டி – யுகம்
பாழிருட்டை உடைத்த ஞானக்கதிர்
பாமரப் பாட்டாளியின் பகலவன்
உழைப்பாளியின் மகத்துவம் பேசிய உத்தமன்
ஊரெங்கும் மூழ்கிக்கிடந்த மூடத்தனத்தை
மண்மூடிப் புதைக்க வந்த மனிதன்
மனிதநேயத்தை விதைத்த மானுடஉழவன்
யார்அறிவார் இவனை
யாவரும் அறிவரோ இவனை

# 47. நிதி

குற்றவாளிக்கு
பாவ விலக்கு
வழங்கினாள்
நீதி தேவதை
“எல்லாம் நிதியின் செயல்”

# 48. பரிவு

உன்
தோளோடு
தோளாய்
நான்
பயணிப்பது
உன்
நிழல்
பூமியில்
விழக்கூடாதுயென்பதற்காகத் தான்

## 49. வாழ்க்கை

அமைதியாய்
நீ கண்ணுறங்குகிறாய்
அலங்கோலமாய்
என்
வாழ்க்கை

# 50. மனசின் பரிதவிப்பு

நீ
காலணியில்லாமல்
நடந்து போகிறாய்
என் கால்களில் கொப்புளங்கள்
அழகான வெள்ளை
முல்லைப்பூ
சூடிக்கொள்கிறாய்
என்
மனம்
அழுக்காகிறது
பேருந்தைவிட்டு
இறங்கிப்போகிறாய்
என்
இதயம் கனமாகிறது
வேறொன்றுமில்லை
உன்
நினைவைத்தவிர
என் மனசில்

# 51. தவிர

உன்
பெயரை
உச்சரித்து உச்சரித்து
என் உதடுகள் வறண்டுபோய்விட்டது
உன்
அழகை ஆராதித்து ஆராதித்து
என்
கண்கள்
ஒளியிழந்துவிட்டது
உன்
நினைவுகளை
சுமந்து சுமந்து
என்
இதயம் இரணமாகிவிட்டது
இனி
இழப்பதற்கு
என் உயிரைத்தவிர ஒன்றுமில்லை

# 52. விண்மீன் பூக்கள்

உன்
முகம்
ஒளிப்படமாய்
என் மனசில் ..
என்
கண்ணில்
கனவைத்தவிர
வேறெதுவுமில்லை ..
உன்
பெயர்
என்மொழியில்
மந்திரச் சொல்லாகிவிட்டது
உன்
அழகைத்தவிர
எதுவும்
அழகாய்த் தெரியவில்லை..
உன்
உயிர்
என்
மெய்யெங்கும்
நீக்கமற நிறைந்திருக்கிறது
எனக்குள்
மோகமில்லை
தாகமிருக்கிறது
மீண்டும் எப்போது சந்திப்போம்
என் காதல்
வானில்

விண்மீன் பூக்களாய்
ஒளியுமிழந்து
கொண்டிருக்கிறாய்..

# 53. எல்லாமுமாய் நீ

உன்
அன்பு
அமுதசுரபியாய்
எனக்குள்
ஊற்றெடுக்கிறது
உன்
பேச்சு..
மூச்சாய்
எனக்குள்
இயங்குகிறது
உன்
ஆதரவுதான்
என்
ஆயுளை நீட்டித்து தந்தது
இனி
என் வாழ்வு
என்னவாகப் போகிறது
யான் அறியேன்...

# 54. பயணம்

வானில்லாமல்
நிலவில்லை
சூரியனில்லாமல்
உயிர்களில்லை
பூமியின்
சுழற்சியில்
நாட்கள் நகர்கிறது
உன்
நினைவில்
என் பயணம் தொடர்கிறது
பாதையும் நீளுகிறது
நான்
உன்
நினைவுகளேந்தி செல்கிறேன்
நம்பிக்கையோடு..

# 55. நிழற்படம்

கண்விழித்ததும்
உன்
முகத்தை தான்
முதலில் காண்பேன்
இப்போதும்
பார்க்கிறேன்
கைபேசியில்
நிழற்படமாய்
உன்
முகத்தை..

## 56. நாங்கள்

நெருப்பில் விளைந்த
புரட்சியாளர்கள் நாம்
விடத்தைப் பருகி
மரணத்தை வென்றவர்கள் நாம்
வீரியத்தோடு எழுங்கள்
சாதி
சனாதனத்தை தகர்த்தெறிந்து
சமத்துவ தேசத்தை நிர்மாணிப்போம்

## 57. உயிர்மெய்

நீ
என் மெய்யின்
உயிர் நீ
என்
பார்வையின்
வெளிச்சம் நீ
என்
விசுவாசத்தின்
அடையாளம் நீ
என்
கனவை நனவாக்கும்
சித்தி பெற்றவள் நீ
என்
இதயத்துடிப்பின்
இரத்தநாளம் நீ
என்
இலக்கின்
அம்பு நீ
என்
பயணத்தின்
பாதச்சுவடு நீ
என்
ஆசையை
கரையேற்றிய
கலங்கரை வெளிச்சம் நீ
என்
சினத்தை

செரித்துகொள்ளும்
அதிசயப்பிறவி நீ
எல்லாமுமாய்
இருந்த நீ
இப்போது
இல்லாமல் போனது
அநீதி

# 58. அறம்

அம்மாவின்
பாசத்தை
நேசிக்கிறேன்
விசுவாசமாய்
அப்பாவின்
அறவழிசுவட்டில்
தடம் பதிக்கிறேன்
தியாகிகளின்
இலட்சியகனவுகளை
இதயத்திலேந்தி செல்கிறேன்
ஊர்கூடி பேசுகிறது
இவன் எதற்கும்
உதவாதவனென்று
உண்மையா?

# 59. வேங்கைகள்

முகமிழந்து
முகவரியிழந்து
முகாரிபாடும்
மூங்கையல்ல - நாங்கள்
வேர்வை வர்க்கத்தின்
வேங்கைகளாய் வருகிறோம்
முடவனாய் மூடனாய்
மூட சமுத்திரத்தில்
மூழ்கி கொண்டிருப்பவர்களை
மீட்கும் மீட்பராய் வருகிறோம்
விளிம்புநிலை மக்களின்
விழிநீரை துடைத்தெறியும்
விடியலாய் வருகிறோம் - நாங்கள்

# 60. சிறை

சாதிய
இருட்டை
உடைத்து
சமத்துவ
தீபமேந்திய
தலைவர்களுக்கு
சாதிச்சிறை
சாதித்தான் தமிழன்

# ஆசிரியர் குறிப்பு:

புயலின் கருப்பையாய் திகழும் வங்கக் கடலோரம் அமைந்துள்ள பெரியதும்பூர் எனும் சிற்றூரில் பிறப்பை வைத்தேன். என் வாழ்க்கைப்பயணம் "தொடக்கவேளாண்மை கூட்டுறவு வங்கி ஊழியனாய் தொடங்கி மற்றும் மக்கள் நலப்பணியாளர், இளநிலை உதவியாளர், ஆசிரியர் என பணி நிறைவடைந்த நிலையில் சமூக ஆர்வலராக பயணிக்கிறேன்."கவிச்சுடர்","நவயுகசிற்பி' விருதுகளையும் ஜோதிடரத்னா, ஜோதிடகலாநிதி பட்டங்களையும் பெற்றுள்ளேன்.

அன்பு நிறைந்த நட்புடன்,<br>
தி.வேதரெத்தினம்,<br>
எம்.ஏ,பி.எட்,டி.எச்.ஏ.,டி.அஸ்ட்ரோ,டி.என்.எஸ்.<br>
செல்:9715396065

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Com-

mons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும்

பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை- http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை

#### தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

#### பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

#### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

#### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்

- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.